# நல்வாழ்வுக்கு ஓர் உத்தமப் பணி

○○○




எழுதியவர் :—

*T. S. வைத்யநாதன், B. A., B. L.,*

திருக்கருகாவூர்

T. S. கோபாலனால்

வெளியிடப்பட்டது.

1956



சாரதா விலாஸ பிரஸ், கும்பகோணம்.

# நல்வாழ்வுக்கு ஓர் உத்தமப் பணி




எழுதியவர் : —

T. S. வைத்யநாதன், B. A., B. L.

திருக்கருகாவூர்

T. S. கோபாலனால்

வெளியிடப்பட்டது.

1956

எண்ணுதற் காக்கரிது இரண்டு மூன்று நாள்
விண்ணவர்க் காக்கிய முனிவன் வேள்வியை
மண்ணினைக் கார்க்கின்ற மன்னன் மைந்தர்கள்
கண்ணினைக் கார்க்கின்ற இமையிற் காத்தனர்.

— கம்பர்.



வேதமார்க்க பிரதிஷ்டாபகர் திருக்கருகாவூர்

*T. L. ஸுப்பய்யர்*, B. A., B, L.

1880—1953

# முகவுரை

(உபந்யாஸ சக்ரவர்த்தி பிரம்மஸ்ரீ சேங்காலிபுரம்
அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் எழுதியது)

काञ्च्यां नरेन्द्रे सचिवो हि लक्ष्मी-
नारायणो भट्ट इति प्रसिद्धः ।
तस्यान्ववाये समभूच्च विप्रो
सुब्बय्य नामाऽखिलयज्वगोप्ता ॥

तिरुकलावूरिति सुप्रसिद्धे
ग्रामे पुरा वैदिकधर्मगोप्ता ।
कर्माणि वेदैर्विहितानि नित्यं
प्रवर्तयन् ब्रह्मकुलेऽतिधीरः ॥

धर्मात्मा भूरिपुण्यैः श्रुतिहृदयमथो वेदविद्भ्यो निवेद्य
स्वीयं वित्तं परममीतं आहिताग्निद्विजेभ्यः ।
नित्यं नित्यं मुदितमनसा साधु दत्वा द्विजेन्द्रः
सुब्बय्यार्यः स जयतितरां श्रीहरेः पादमूले ॥

संप्राप्तो यज्ञवाटं निखिलमपि धनं यज्ञभूमौ वितीर्य
स्वीयं विप्रान् पुलकिततनुः तांश्च दृष्ट्वाऽथ तेभ्यः ।
यज्ञादन्यत् श्रुतिविहितमहं नैव पश्यामि किंचित्
इत्युक्त्वाऽसौ सजयतितरां श्रीहरेः पादमूले ॥

नित्यं कार्यं ह्यग्निहोत्रं द्विजेन्द्रैः
इष्टिः कार्या मङ्गलाय प्रजानाम् ।
इत्थं नित्यं ह्यर्थयित्वाऽऽऽहिताग्नीन्
सुब्बय्यार्यो राजते पुण्यलोके ॥

पुत्रान् मार्गे वैदिके स्थापयित्वा
पुण्येनैव स्वेन भुक्त्वा च भोगान् ।
श्रौतं कर्म स्थापयित्वा नृलोके
सुब्बय्यार्यो राजते पुण्यलोके ॥

काञ्चीपुरे कापि शिवस्य मूर्तिः
विराजते या यतिरूपधारिणी ।
तस्याः प्रसादात्किल यज्ञरक्षकः
सुब्बय्यनामा यशसा प्रकाशते ॥

கர்ப்பிணிகளுக்கு ஸுகப் பிரஸவமும், பிறக்கும் சிசுக்களுக்குப் பாதுகாப்பும் அளிக்கக்கூடிய அரிய அனுக்ரஹ சக்தியுடன் விளங்கும் ஸ்ரீகர்ப்பரக்ஷாம்பிகா க்ஷேத்திரமாகிய திருக்கருகாவூர் கிராமம் தஞ்சை ஜில்லாவில் மிகப் பிரஸித்தமானது. மஹாபுண்யபுருஷரான ஸ்ரீ டி. எல். ஸுப்பய்யர் என்ற மஹான் வஸித்து வந்த புண்ய பூமி அது. குமாண்டூரைச் சேர்ந்தவரும், சுமார் 300-வருஷங்களுக்கு முன்பு காஞ்சிமாநகரில் திவானாக இருந்தவருமான ஸ்ரீ லக்ஷ்மீ நாராயண பட்டரின் வம்சத்தில் தோன்றிய ஸ்ரீஸுப்பய்யர் அவர்கள் நமது தென்னாட்டில் ஒரு ரத்னம்போல் பிரகாசித்துவந்தார்.

திருக்கருகாவூர் வாஸிகள் அனைவருமே ஒரே குலத்தைச் சேர்ந்தவர்கள். பொதுநலப்பணியில் ஈடுபட்டு ஸத்கீர்த்தி பெறுவது அந்த ஊரின் இயல்பு என்றே கூறலாம். திருக்கருகாவூர் என்ற பெயரைக் கேட்டமாத்திரத்திலேயே பந்துலு அய்யர், டி. எல். ஸுப்பய்யர், ஸ்ரீமான் வி. கிருஷ்ணமூர்த்தி அய்யர் முதலியவர்களுடைய கீர்த்திதான் ஞாபகத்துக்கு வருகிறது. அம்மூவரும் படிப்பை முடித்துக்கொண்டு, குடும்பப் பொறுப்பை ஏற்றுக்கொண்டவுடனேயே ஸ்ரீ கர்ப்பரக்ஷாம்பிகையின் ஆலயத்துக்கு அதிவிமரிசையாக மஹாகும்பாபிஷேகம் நடத்தினர். அதையடுத்து அந்த ஊரில் இடைவிடாது தர்மங்கள் நடந்துகொண்டே வருகின்றன.

ஸ்ரீ ஸுப்பய்யர் கொஞ்சகாலம் வக்கீல் தொழில்புரிந்தார். லோக க்ஷேமார்த்தமான பணியில் ஈடுபடவேண்டிய பாக்கியம் அவருக்கு இருந்ததால் அவர் வக்கீல் தொழிலை சீக்கிரமே கைவிட்டுவிட்டு, தமது ஆயுள் பூராவையுமே ஆஸ்திக ஸேவைக்கு அர்ப்பணித்துக்கொண்டார். சென்னபுரி அன்னதான ஸமாஜத்தின் மூலம் அடிக்கடி ஏழைகளுக்கு அன்னதானம் செய்துவந்தார். சென்னை ஸ்ரீராமகிருஷ்ண மடத்துக்கு பலமுறை பொருளுதவி செய்தார். பக்கத்திலுள்ள ஒன்பத்துவேலி பெருமாள் கோவிலுக்கு திருப்பணி செய்து மஹாகும்பாபிஷேகமும் செய்துவைத்தார். எந்த இடத்தில் எந்தவிதமான ஸத்காரியம் நடந்தாலும் ஸ்ரீ அய்யர் அவர்களுடைய ஆதரவு கிடைத்துவந்ததால், ஸ்ரீ அய்யர் அவர்களுக்கு ஸாதுஸங்கம் ஸுலபமாகியது. கல்வியறிவும், பாரம்பர்யமான ஸத்வாஸனையும் உள்ள ஸ்ரீ அய்யர் அவர்கள் ஸாது ஸங்கத்தின் விளைவாக வெகு சீக்கிரத்திலேயே வைதிக தர்மங்களின் சிறப்பையும் சூக்ஷ்மங்களையும் நன்கு உணர்ந்தார். ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதிகளின் அனுக்ரஹத்துக்கு பரம பாத்திரர்களாக இருந்துகொண்டு வந்ததுடன், ஸ்ரீ அய்யர் அவர்கள் வைதிக மதத்துக்கே இன்றியமையாததோர் பலமாக த்திகழ்ந்துவந்தார்.

தற்காலம் பல அக்நிஹோத்ரிகளும், ஸோமயாஜிகளும் விளங்குவதற்கு ஸ்ரீ அய்யர் அவர்களின் நன்முயற்சியே காரணம். அவரை எனது பால்யம் முதற்கொண்டே நான் அறிவேன். அவர் என் பிதாவான பிரம்மஸ்ரீ ஸுப்ரமண்ய தீக்ஷிதர் அவர்களிடம் பஞ்சாக்ஷர உபதேசம் பெற்றுக்கொண்டதும், எனது பிதா அனுஷ்டித்த சிரௌத கர்மாக்கள் எல்லாவற்றிற்கும் அவர் தாராளமான பொருளுதவி செய்துவந்ததும், சேங்காலிபுரத்தில் நடைபெற்று வரும் எங்கள் பெரியவாளுடைய ஆராதனைகளில் அவர் தவறாமல் கலந்துகொண்டு, உத்ஸாஹமூட்டும் உபந்யாஸங்களை நிகழ்த்திவந்ததும் என் மனக்கண்ணின்முன் வந்து நிற்கின்றன.

யாகாதி கர்மாக்களுக்கு புத்துயிர் அளித்த பெருமை ஸ்ரீ ஸுப்பய்யர்வாளையே சாரும். யாசிக்கப்படாமலேயே யக்ஞங்களுக்கு பொருள் உதவி அனுப்புவதும், அக்னிஹோத்ரிகளுக்கு பிரதிவருஷமும் வர்த்தனைபோல் பணம் அனுப்புவதும் அவருடைய வழக்கமாக இருந்தது. அவருடைய அளவற்ற உதவியால்

பல வேதவித்துக்கள் அக்னி ஹோத்ரத்தை மேற்கொண்டு ஸோம யாகங்கள் செய்து தீக்ஷிதர்களாயினர். பத்து வருஷங்களுக்கு முன் பேட்டூர் அணையில் ஜலம் குறைந்து விவசாயிகள் கவலையுற்றிருந்த சமயத்தில் ஸ்ரீ அய்யர் அவர்கள் பல வேதவித்துக்களை அழைத்து ஸோமயாகம் செய்யும்படி தூண்டி, பொருளுதவியளித்து, கூடவே இருந்து யாகங்களையும் நடத்தித்தந்தார். அந்த யாகங்களின் பலனையும், ஸ்ரீ அய்யர் அவர்களின் சிரத்தையையும் பார்த்து மற்றும் பல பிரபுக்கள் யக்ஞமகிமையை உணர ஆரம்பித்தனர். யக்ஞங்களுக்கு லௌகிகர்கள் ஆதரவளிப்பது ஸஹஜமாக இருப்பதற்கு ஸ்ரீ அய்யர் அவர்களின் உதாரணமே காரணம். யக்ஞவிஷயங்களை ஸகலரும் அறியும்பொருட்டு ஸ்ரீ அய்யர் அவர்கள் 'யக்ஞஸம்ரக்ஷணீ' என்ற கிரந்தத்தைத் தமிழில் மொழிபெயர்க்கச் செய்து வெளியிட்டார்.

வேதோக்தமான கர்மாக்களின் பெருமையை உணர்ந்து, தமது ஊராகிய வேப்பத்தூரிலும், கல்யாணபுரத்திலும் பல யாகங்களை நடத்திக்கொடுத்து, மகத்தான ஆதரவு அளித்து வந்த தீரர் ஸ்ரீ நரஸிம்மய்யர் அவர்கள் ஸ்ரீ ஸுப்பய்யர்வாளுக்கு யக்ஞங்களில் உள்ள உத்ஸாகத்தைக் குறிப்பிட்டு, அடிக்கடி மெச்சிப் பேசுவதுண்டு. ஸ்ரீஜகத்குரு காஞ்சி காமகோடி பீடாதிபதிகள் யக்ஞங்களுக்கு மடத்தின் சார்பில் பண உதவியளிக்கும் விஷயத்தில் ஸ்ரீ ஸுப்பையர்வாளிடமே முழுப் பொறுப்பையும் ஒப்படைத்திருந்தார்கள். ஸ்ரீ அய்யர் அவர்களுடைய பரிசுத்தமான மனதுக்கும், உண்மையான ஆஸ்திக சிரத்தைக்கும் வேறு அத்தாட்சி தேவையில்லை.

ஸ்ரீ அய்யர் அவர்கள் கடைப்பிடித்த வழி சிறந்ததெனமதித்து, அவரது புத்திரர்களும், திருக்கருகாவூர் கிராமவாசிகளும் தொடர்ந்து யக்ஞங்களை ஆதரித்து வருவது வைதிக உலகத்துக்கு மகத்தான நிம்மதியை அளித்து வருகிறது. 1953-ல் தமது 73வது வயதில் புண்யலோகம் சென்ற அன்னாருடைய ஞாபகார்த்தமாகக் கிராம வாஸிகள் "நல்வாழ்வுக்கு ஓர் உத்தமப்பணி" என்ற பெயருடன் கூடிய அழகான இச்சிறு புத்தகத்தை லோகோபகாரமாக வெளியிட்டிருப்பது அவர்களுடைய உயரிய பண்பைக் காட்டுகிறது. நம்பிக்கை இருந்தபோதிலும் கர்மானுஷ்டானங்களை பூரணமாகச் செய்ய தற்கால நிலைமை இடங்கொடாதிருப்

பதால் லௌகிகர்களின் மனம் ஏக்கமடைவது ஸஹஜம். ஆனால் அந்த ஏக்கத்தைப் போக்கி, கர்மானுஷ்டானத்தின் பூரண பலனை எளிதில் அடைய, இப்புத்தகம் வழிகாட்டுகிறது. எளிய நடையில் இப்புத்தகத்தை எழுதியுள்ள ஸ்ரீ டி. எஸ் வைத்யநாதய்யருக்கும், அவருடைய ஸஹோதரர் ஸ்ரீ டி. எஸ். கோபால அய்யருக்கும், திருக்கருகாவூர் கிராம வாஸிகளுக்கும் இந்த அரிய ஸேவையின் மூலம் பரம சிரேயஸ் உண்டாகும் என்பதில் ஐயமில்லை. அவர்கள் அனைவருக்கும் ஸர்வமங்களங்களும் உண்டாகவேண்டும் என்று பகவானைப் பிரார்த்திக்கிறேன்.

முகாம் : அயலூர்
திருச்சி ஜில்லா,
1—6—'56

சேங்காலிபுரம்
அனந்தராம தீக்ஷிதர்,
25, வடக்கு மாவனேரி, சேலம்.



## பாராட்டுரை

இச்சிறு புத்தகத்தில் உள்ள விஷயங்களைக் கண்டு பரம ஸந்தோஷமடைந்தேன். ஸ்ரீ ஸாப்பய்யர்வாளின் விசேஷ அபிமானத்துக்கு பாத்திரமாக இருந்த எனக்கு இந்த வெளியீட்டில் பங்குகொள்ள வாய்ப்புக்கிடைத்ததை பெரிய பாக்யமாகக் கருதுகிறேன். ஏனெனில் நானும் அன்னாருடைய நினைவுக்கு மரியாதை செலுத்த கடமைப்பட்டவன்.

ஸ்ரீ ஸாப்பய்யர்வாளுடைய பெருமையை முகவுரையில் பிரம்மஸ்ரீ அனந்தராம தீக்ஷிதர் அவர்கள் விஸ்தாரமாகக் கூறியிருக்கிறார். "நல்லார் ஒருவர் உளரேல் அவர்பொருட்டு எல்லோர்க்கும் பெய்யும் மழை" என்பதற்கு வியாக்யானம்போலவே அய்யர்வாளுடைய வாழ்க்கை அமைந்திருந்தது.

அய்யர் அவர்கள் வைதிக தர்மம் நிலைப்பதற்காகச் செய்த முயற்சி அவருடைய ஜீவ தசையில் மட்டுமின்றி அவருக்கு பிற்காலத்திலும் புஷ்பித்த வண்ணமாய் இருந்துவருகிறது. க்ரதுக்களுக்குள் பெரிய வாஜபேயம் என்பது மிகவும் சிரமஸாத்யமானது. சென்ற முப்பது வருஷங்களுக்குள் தமிழ்நாட்டில்

இரண்டுமுறைதான் நடந்தன. 1933ல் கும்பகோணத்திலும், 1946ல் வேப்பத்தூரிலும் நடைபெற்றன. அந்த இரண்டு யக்ஞங்களுக்கும் பிரதான உத்ஸாகமளித்தவர் ஸ்ரீ ஸாப்பய்யர்வாள் அவர்களே. அவருடைய ஜீவ தசைக்குப்பின் சென்ற வருஷம் நடந்த ஸம்ஸ்தா வாஜபேயம் திருக்கருகாவூரிலேயே நடந்ததென்பதும், இவ்வருஷம் நடக்கவிருக்கும் பெரிய வாஜபேயமும் அங்கேயேதான் என்பதும் மிகவும் குறிப்பிடத்தக்க விஷயங்களாகும். மேலும் கூடிய சீக்கிரத்தில் திருக்கருகாவூர் ஆலயத்துக்கு மஹா கும்பாபிஷேகம் நடத்துவதென்று, டிரஸ்டி ஸ்ரீ கோபாலய்யரும் கிராமவாஸிகளும் முடிவுசெய்திருக்கின்றனர். இவ்வளவு ஆஸ்திக சிரத்தையுள்ள அந்த கிராமத்தார்களுக்கு கீர்த்தியும் சுபிட்சமும் பெருகிவருவதில் ஆச்சரியம் எதுவுமில்லை.

धर्मो रक्षति रक्षितः ।

அய்யா தீக்ஷிதர்.
(சேங்காலிபுரம்)

## நன்றி

எங்கள் தகப்பனாரின் ஞாபகார்த்தமாக இச்சிறு புத்தகத்தை எழுதுமாறு தூண்டிய எங்கள் நண்பர்களுக்கும், இப்புத்தகத்துக்கு அன்புடன் முகவுரை எழுதித்தந்த பிரம்மஸ்ரீ அநந்தராம தீக்ஷிதர் அவர்களுக்கும், இதை அச்சிட்டுத் தந்த சாரதா விலாஸ அச்சுக் கூடத்தாருக்கும் எங்கள் நன்றி.

திருக்கருகாவூர்,
15—6—'56.

டி. எஸ். வைத்யநாதன்,
டி. எஸ். கோபாலன்.

# நல் வாழ்வுக்கு
# ஓர் உத்தமப் பணி

கடவுளின் அருளின்றி வாழமுடியாது என்ற உணர்ச்சி ஜனங்களிடையே நாளுக்கு நாள் வலுத்துவருவதைக் காண்கிறோம் அணுகுண்டு பயம் ஒருபுறமும், நூதனமான தொத்து நோய்கள் மற்றொரு புறமும் மகத்தான கவலைக்கு ஆஸ்பதமாயிருந்து வருகின்றன. பூமியின் வீர்யம் குறைந்துபோய் ரஸாயன உரங்களை நாடவேண்டியிருப்பதுடன், பருவமழைக்குப் பதிலாக செயற்கை மழைபற்றி சிந்திக்கவேண்டிய நிலை நெருங்குகிறது. நிதானமின்மையும், நிம்மதிக் குறைவும் மலிந்துவிட்டன. இந்த பயங்கரமான சூழ் நிலையில் மனிதனின் உள்ளம் கடவுளை நாடுவது ஸஹஜமே.

ஸுகதுக்கங்கள் மனிதனுடன் கூடவே பிறந்தவைகள் என்பது உண்மையேயாயினும், நமது முன்னோர்கள் நம்மைப் போல் அவ்வளவு சிரமத்துக்கு உள்ளாகவில்லை. மனோதைர்யத்தையும், உற்சாகத்தையும் இழந்துவிடுமளவுக்கு அவர்களைப் பெரும் பீதி எதுவும் வாட்டவில்லை. திட நம்பிக்கையுடன், வேதம் காட்டிய வழியிலேயே சென்றதால்தான் அவர்கள் ஓரளவு ஸுகமாகவே வாழ முடிந்தது. சுருதியை விட்டு விலகிய ஸங்கீதம் இனிமையாயிருப்பதில்லை. வேதம் எனப்படும் சுருதியை விட்டு விலகிய வாழ்க்கையும் ரஸப்படாது.

இம்மை, மறுமை இரண்டிலும் இன்பத்தை உறுதி செய்வதால்தான், வேதத்துக்கு தனிச்சிறப்பு. சமூகம் அனைத்தும் நன்று யிருந்தால்தான், அதில் வாழுந் தனி மனிதன் ஸந்தோஷமாய் வாழமுடியும். வேதம் விதிக்கும் பிரார்த்தனைகள் ஒவ்வொன்றிலும் இந்த தத்வத்தைக் காணலாம். ஒரு கிராமத்தில் ஒரு தொத்துநோய் நுழைந்த பிறகு, அது தன் வீட்டுக்கு வரக்கூடாது என்று ஒரு தனி மனிதன் பிரார்த்திப்பதைக் காட்டிலும், முன் கூட்டியே அவன் "இந்த கிராமத்தில் யாருக்குமே பீடை நேரிடக்கூடாது" என்று பிரார்த்திப்பதுதான் சரியான தற்காப்பாகும். ஆதலால்தான் ஸ்ரீருத்ரப் பிரச்னமானது

**ग्रामे अस्मिन् अनातुरं**

என்று பிரார்த்திக்கிறது. நம்மோடு கூடவாழும் இதரர்களும் விவேகிகளாயிருந்தால்தான் நாமும் நன்ருக வாழமுடியும் என்பதையனுசரித்தே காயத்ரீ மந்திரம் "எல்லோரும் புத்திசாலிகளாக இருக்கவேண்டும்" என்று பிரார்த்திக்கிறது. மனிதனுக்கு மனிதன் விரோதமின்றி ஒற்றுமையுடன் வாழ்ந்தால் தான், பரஸ்பர ஒத்துழைப்பு சாத்யமாகும். ஆதலால்

**मा विद्विषावहै**

போன்ற மந்திரங்களின் மூலம் ஒற்றுமை பிரார்த்திக்கப்படுகிறது ஜாதித்துவேஷமின்றி அனைவரும் சினேக மனப்பான்மையுடன் வாழவேண்டுமென்பதை

**रुचं नो धेहि, मित्रस्य चक्षुषा**

போன்ற மந்திரங்கள் வற்புறுத்துகின்றன. மழை வேண்டுமென்று வேதம் அடிக்கடி பிரார்த்திக்கிறது. மழை பெய்வதன் மூலம் பிரார்த்திப்பவனுக்கு மட்டுமின்றி தேசத்துக்கே சுபிட்சம் ஏற்படுகிறது. பொது நலனையே கருத்தில்கொண்டு, கருணைவடிவமாய் விளங்கும் வேதம் ஈச்வரனுடைய மூச்சுக் காற்று என்றும், மனிதனுல் ஆக்கப்பட்டதல்லவென்றும் மகரிஷிகள் கூறுவதை அலக்ஷ்யம் செய்யச் செய்ய, வாழ்க்கையில் இன்னல்கள் தான் பெருகும்.

வாழ்க்கையில் ஏற்படும் கஷ்டங்களுக்கு நாம் செய்யும் பாபமும் பூர்வ ஜன்ம வினையுமே காரணம். மனிதன் இம்மையில் கூடியவரை ஸுகமாக வாழ்வதற்கும், மீண்டும் மீண்டும் பிறந்து கஷ்டப்படாமலிருப்பதற்கும் வேதம் சாச்வதமான வழியைக் காட்டுகிறது. சமூகத்துக்குச் செலுத்தவேண்டிய கடன், அதாவது செய்யவேண்டிய சமூகஸேவை பாக்கியிருக்கும் வரையில் மனிதன் திரும்பத் திரும்ப ஜனித்துக் கொண்டேயிருக்கிறுன். மறு ஜன்மாவில் கடனின் பளு அதிகரிக்காமலிருக்கவேண்டும் என்பதற்காகத்தான் சாஸ்திரமானது நாமனைவரும் பாப புண்ய விவேகத்துடன் செயல்படவேண்டுமென்று கூறுகிறது. மனிதன் தன்னை ஸரியான ஸேவை மூலம் தூய்மைப்படுத்திக்கொள்ளக் கொள்ள, அவனுடைய ஸ்வபாவம் மாறுகிறதென்றும், சித்தசுத்திக்கேற்ப மறுபடி உத்தம ஜன்மாவில் ஜனிக்கிறுனென்றும், ஜன்மாவின் தன்மை

மாற மாற, அவன் செலுத்தவேண்டிய கடனின் தன்மையும் மாறுகிறதென்றும் சாஸ்திரம் கூறுகிறது. கடன் என்பது நாம் செய்ய வேண்டிய சேவையைக் குறிக்கிறது.

சேவை செய்யச் செய்ய ஸாத்விக குணம் மேலிட்டு, புத்தி தெளிவாகி, மோக்ஷப் பாதையில் துரிதமாகச் செல்கிறோம். பிராம்மணன் பல ஜன்மாக்களைக் கடந்து வந்துள்ளவன். ஆகையால் விவேகம் மிகுந்தவன். புத்திபலமுள்ள அவனை ஜனங்களின் மனோவளர்ச்சிக்கான சேவையில் ஈடுபடுத்தவேண்டியதவசியம். பிராம்மணனுக்கு விதிக்கப்பட்டிருக்கும் கர்மாக்கள் அனைத்தும் இந்தக் கருத்தை அடிப்படையாய்க் கொண்டவை. மேலும் ஜனங்களின் தேவைகள் பலவிதம். சிலவற்றை உடலுழைப்பால் பூர்த்தி செய்யமுடியும். உடலுழைப்பால் நெல் சாகுபடி செய்துவிடலாம். ஆனால் சாகுபடிக்குத் தேவையான பருவமழையை உடலுழைப்பால் அடைய முடியாது. அதை அடைய வேதம் வழி கூறுகிறது. அந்த வழியை அனுசரிக்க ஒருவிதமான மனப்பக்குவம் உள்ளவர்கள் தேவை. கடவுளை ஒரு குறிப்பிட்ட வழியில் அணுகி, அதன் மூலமாகவும் சமூகத்துக்கு சேவைசெய்வதற்காக ஏற்பட்டவர்கள் பிராம்மணர்கள்.

ஒரு குறிப்பிட்ட சேவை செய்வதற்காக ஏற்பட்டவர்கள் அந்த சேவை செய்ய இஷ்டமில்லை என்று கூற உரிமை கிடையாது. ஒருவன் தனக்குப் பிரத்யேகமாகக் கிடைக்கக்கூடிய லாபத்தைத் தியாகம் செய்துவிடலாம். ஆனால் அந்த வேலையின் மூலமாய்ப் பிறருக்கும் லாபம் இருக்குமானால் அதை அவன் செய்தே தீரவேண்டும். பிறருக்குச் செலுத்தவேண்டிய கடனைச் செலுத்தியே தீரவேண்டும். அப்படிப்பட்ட கர்மாக்களுக்கு நித்ய கர்மாக்கள் என்று பெயர். அதைச் செய்யாவிட்டால் பாபமுண்டு. பிராயச்சித்தம் செய்துகொண்டு மறுபடி கர்மாவைத் தொடங்கியே தீரவேண்டும். சுய நலத்தைக் கோராமல் அந்தக் கர்மாவை நிஷ்காம்யமாகவும், பகவதர்ப்பணமாகவும் செய்தால் அதுவே மோக்ஷ ஸாதனமுமாகிறது. நாம் பிறந்து பிறந்து கஷ்டப்படாமல் மோக்ஷமடைவதில் வேதத்துக்கு அக்கரையிருப்பதால், அவ்வாறு செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ளது. நித்ய கர்மாக்களில் பொது

நலன் அடங்கியிருப்பதால் அவையனைத்தும் நிஷ்காம்யகர்மாக்களாகும்.

ஒருவன் இளம் வயதிலேயே தபோமஹிமையால் கடவுளை பிரத்யக்ஷமாக தரிசித்தபோதிலும், அவன் லோக க்ஷேமார்த்தமான நித்யகர்மாக்களை ஓரளவாவது அனுஷ்டித்த பிறகுதான் மோக்ஷத்துக்கு அருகதையாகிறான். ஆகையால்தான் துருவஸ்வாமியைப்பார்த்து பகவான் "நீ திரும்பிப்போய் யக்ஞங்களால் என்னை ஆராதிக்கவேண்டும். பிறகுதான் நீ என்னிடம் வரலாம்" என்றார் :—

इष्ट्वा मां यज्ञहृदयं यज्ञैः पुष्कलदक्षिणैः ।
ततो गन्ताऽसि मत्स्थानं सर्वलोकनमस्कृतम् ॥

அவ்வாறே பிரஹ்லாதனும் யக்ஞங்கள் செய்தான். பகவந்நாமோச்சாரணத்தினால் உயிர்தப்பிய அஜாமிளனும் ஸ்வகர்மானுஷ்டானம் செய்த பிறகே மோக்ஷமடைந்தான். கர்மானுஷ்டானம் செய்யக் கடமைப்பட்டவன் அதை விட்டுவிட்டு, வெறும் பக்தி பண்ணினால் போதாது. வெறும் பக்தியென்பதை கர்மானுஷ்டானம் செய்த நேரம் போக மீதியுள்ள நேரங்களில்தான் செய்யவேண்டும். இதை

क्रियावसाने

என்ற பதத்தின்மூலம் ஸ்ரீமத் பாகவதமும் வற்புறுத்துகிறது. கர்மானுஷ்டான பூர்வமாய் பக்தி செய்யவேண்டுமென்பதை ஆதி சங்கரரும்

तेनेशस्य विधीयतामपचितिः

என்பதன்மூலம் கூறுகிறார்.

அத்வைதம், த்வைதம், விசிஷ்டாத்வைதம், பக்தி முதலிய தத்வங்களை இதர மதஸ்தர்களும் அங்கீகரிக்கின்றனர் கர்மானுஷ்டானத்தினால்தான் வைதிக மதத்துக்குச் சிறப்பு. கர்மானுஷ்டானம் குறையக்குறைய, ஆசாரம் குறையும். ஆசாரம் குறைந்தால் ஜாதிக்கலப்புக்கும் குழப்பத்துக்கும் இடமேற்படும். ஜாதிக்குழப்பத்தைப்போல் நரகவேதனை வேறில்லை என்று கீதையில் பகவான் கூறுகிறார். ஸகல இனத்தவர்களும் படிப்படியாய் உயர்ந்து, மோக்ஷத்துக்கு அருகதை யுள்ளவர்களாகவேண்டுமென்பதே வர்ண தர்மத்தின் லக்ஷ்யம்.

மனிதன் பிறந்தவுடனேயே துறவியாகிவிடவேண்டும் என்று வேதம் சொல்லவில்லை.

नन्दाम शरदश्शतं मोदाम शरदश्शतं

என்ற மந்த்ரம் வாழ்க்கை வாழ்வதற்கே என்பதைக் காட்டுகிறது. கிரஹஸ்தாச்ரமம் லோகக்ஷேமத்துக்கு அத்யாவச்யமாதலால், விவாஹம் செய்துகொள்ளப்போவதைக் காட்டும் வகையில் "எனக்கு நல்ல பிள்ளைகள் பிறக்கவேண்டும்" என்று பிரார்த்திக்கும் மந்திரத்தைச் சொல்லி, பிரம்மசாரி ஸமிதாதான ஹோமம் செய்கிறான். பிரம்மசாரி குருகுலவாசம் முடிந்தவுடன் விவாகம் செய்துகொண்டுதான் ஆகவேண்டும் என்று தைத்திரீயோபநிஷத் உபதேசிக்கிறது. மனுவும்,

अधीत्य विधिवद्वेदान् पुत्रांश्चोत्पाद्य धर्मतः ।
इष्ट्वा च शक्तितो यज्ञैः मनो मोक्षे निवेशयेत् ॥

என்றார். வாழ்க்கையை நன்கு அனுபவித்துக் கர்மானுஷ்டானங்களைச் சக்திக்கு ஏற்றவாறு செய்த பிறகே மோக்ஷத்தில் ஆசை வைக்கவேண்டும். இல்லையேல் லோகக்ஷேமத்துக்கு லோபம் ஏற்படுவதுடன், மனிதனுக்குச் சித்த சுத்தி ஏற்படாமல் போய்விடும். சாஸ்திரவிரோதமான காரியங்களால் ஏற்பட்ட பாபம் சாஸ்திர விஹிதமான கர்மாக்கள் மூலமே தொலையவேண்டும். காலில் முள் தைத்தால், அதை முள் போன்ற முள்வாங்கியைக் கொண்டுதான் எடுக்கவேண்டியிருக்கிறது. கர்மா நம்மைவிட்டு நழுவவேண்டுமேயொழிய அதை நாம் உதறித்தள்ளிவிடக்கூடாது. கர்மபந்தமொழிந்து, நைஷ்கர்ம்யம் ஏற்படுவதற்காகவே கர்மானுஷ்டானம் விதிக்கப்பட்டுள்ளது. கர்மானுஷ்டானம் செய்பவனுக்கு நாளடைவில் வைராக்யம் ஏற்பட்டு ஆத்மஞானம் கிட்டிவிடும் என்று சாஸ்திரம் கூறுகிறது. மேலும் பக்தி மார்க்கமும் சுலபமன்று.

अनन्याश्चिन्तयन्तो मां

என்று கீதை கூறுகிறது. ஸதாஸர்வகாலமும் பக்தியில் மனதை ஈடுபடுத்துவதென்பது ஸுலபமேயல்ல. பக்திபூர்வமான கர்மானுஷ்டானமே ஸுலபம். ஞானமார்க்கமென்பதும் கஷ்டம். ஞானம் என்பது புத்தகப்படிப்பால் ஏற்படாது. பகவதனுக்ரஹமன்னியில் ஞானம் கிட்டாது. ஸ்வகர்மானுஷ்டானமே ஈச்வரானுக்ரஹத்தை அடைய நல்ல வழி.

நித்ய கர்மாக்களை யதாசக்தியாவது செய்யவேண்டும்.

तद्धि कुर्वन् यथाशक्ति प्राप्नोति परमां गतिम्

என்று சாஸ்திரம் கூறுகிறது. அதை அறவே விட்டுவிடக் கூடாது; முடிந்த அளவு செய்தாலே பலன் கிட்டும். நிஷ்காம கர்மாவானதாலும், பெரும்பாலோர் செய்யக் கூடுமாதலாலும் யதாசக்தி செய்தால்கூட சமூகத்துக்கு போதிய பயன் ஏற்படும் என்பது கருத்து. காம்ய கர்மாக்கள் ஒரு குறிப்பிட்ட சுய நலனைக்கருதி செய்யப்படுவதால் அங்கம் குறையாமல் பரிபூர்ண மாகச் செய்யாவிடில் அது வியர்த்தமாகும். கலியில் பரிபூர்ண மாகச் செய்வது சாத்யமில்லையாதலால் கலியில் காம்ய யாகங்கள் செய்யக்கூடாதென்றே சாஸ்திரம் தடைசெய்கிறது. நித்ய கர்மாக்கள் அவசியம் செய்யவேண்டியதாகையால் யதாசக்தி செய்ய ஓரளவு ஸ்வதந்திரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

உலகத்தை சிருஷ்டிக்கும்போதே யக்ஞம் என்ற கர்மா வையும் கடவுள் ஏற்படுத்திவைத்தார். தம்மிடமிருந்து ஜனங் கள் எதிர்பார்க்கக்கூடிய உதவியனைத்தையும் தேவதைகள் வசம் கடவுள் ஒப்படைத்தார். மனிதர்கள் யக்ஞங்கள் மூல மாய் தேவதைகளை ஆராதித்து அந்த உதவிகளை தேவதைகளிட மிருந்து பெறலாமென்றும், தேவதைகளுக்கு ஹவிர்ப் பாகங் கள் கொடுத்து திருப்தி செய்யாமல் தம்மை நேரிடையாக அணுகுவது கூடாதென்றும் கூறினர். தேவதைகளுக்குப் பசி, தாகம் உண்டென்றும், நாம் கொடுக்கும் ஹவிர்ப்பாகங்களை அவர்கள் எதிர்பார்த்துக்கொண்டிருக்கின்றனரென்றும் ஐத ரேய உபநிஷத்து கூறுகிறது. தேவதைகளுக்கும் மனிதர்களுக் கும் இவ்விதம் பரஸ்பர ஸம்பந்தத்தை ஏற்படுத்தி, கடவுள் விலகிவிட்டதால் தேவைக்கேற்ற கர்மா செய்யாமல், கடவுள் காட்டியுள்ள வழியை அலக்ஷ்யம் செய்துவிட்டு, வெறும் பக்தி மூலம் உதவி பெறமுடியாது. கடவுள் காட்டியுள்ள வழியை உதாஸீனம் செய்பவர்கள் அவருடைய கருணையை அடைய முடியாது.

सहयज्ञाः प्रजास्सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।
अनेन प्रसविष्यध्वं एष वोऽस्त्विष्टकामधुक् ॥
देवान्भावयताऽनेन ते देवाः भावयन्तु वः ।
परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥

என்று இதே கருத்தை கீதையிலும் பகவான் விளக்கியுள்ளார். இந்த பரஸ்பர ஸம்பந்தம் மகாபாரதத்தில் அச்வமேதிக பர்வா விலும்

देवास्तु तर्पिता यज्ञैः लोकान् संवर्धयन्त्युत ।
उभयोर्लोकयोश्चैव भूतिः यज्ञैः प्रदृश्यते ॥

என்று விளக்கப்பட்டுள்ளது. திலீபனைப்பற்றி கூறுமிடத்தில்

दुदोह गां स यज्ञाय सस्याय मघवा दिवम् ।

என்று காளிதாஸனும் கூறுவதைக் காணலாம். சாகுந்தலத்தில் துஷ்யந்தனை மரீசி மகரிஷி ஆசீர்வதிக்குமிடத்தில்

तव भवतु विडौजाः प्राज्य वृष्टिः प्रजासु, त्वमपि विततयज्ञः स्वर्गिणः प्रीणयस्व ।

என்கிறார். தேவதைகளுக்கும் நமக்கும் ஸம்பந்தமிருப்பதுடன், மழை பெய்வதற்கு யக்ஞங்கள் அத்யாவசியம் என்பதும் தெளிவாகிறது.

यज्ञाद्भवति पर्जन्यः

என்று கீதையும் கூறுகிறது. வஸிஷ்டாதி மகரிஷிகள் செய்யும் யாகங்களால்தான் மழை பொழிந்து தான்ய விருத்தி உண்டாகிறது என்று திலீபன் வாயிலாக காளிதாஸன் கூறுகிறான்:—

हविरावर्जितं होतः त्वया विधिवदग्निषु ।
वृष्टिः भवति सस्यानां अवग्रहविशोषिणाम् ॥

யக்ஞத்துக்கும் மழைக்குமுள்ள ஸம்பந்தத்தை வேதம் பல இடங்களில் கூறுகிறது:—

(1) भूमिं पर्जन्या जिन्वन्ति । दिवं जिन्वन्ति अग्नय इति ।
(2) सौम्या खलु वा आहुतिः दिवो वृष्टिं च्यावयति ।
(3) दिवो वृष्टिमेरय । (4) कृषिर्वृष्टिर्यजमानाय कल्पताम् ।

யாகத்தில் விசேஷத் திரவியங்களைக்கொண்டு மந்திரவத்தாகச் செய்யப்படும் ஹோமத்திலிருந்து எழும் புகையானது மேகமண்டலம் வழியாக சூரியனை அடைகிறதென்றும், சூரியனே மழைக்குக் காரணமென்றும் மனு கூறுகிறார்:—

अग्नौ प्रस्ताहुतिस्सम्यक् आदित्यमुपतिष्टते ।
आदित्याज्जायते वृष्टिः वृष्टेरन्नं ततः प्रजाः ॥

ஆகாயத்துக்கு அக்னி போஷாக்கு அளிக்கிறதென்றும், பூமிக்கு ஆகாயமானது மழை ரூபமாய் போஷாக்கு அளிக்கிறதென்றும் வேதம் கூறுகிறது. ஆகவே மழைக்கும் யக்ஞத்துக்குமுள்ள ஸம்பந்தம் (ஸயன்ஸ்) நவீன விஞ்ஞான தத்வத்தை ஒத்தது. அணுகுண்டுப் புகைதான் அகால விருஷ்டிக்குக் காரணமென்று சென்ற ஆண்டில் விஞ்ஞானிகள் கூறினர். விஷப்புகைக்கு அவ்வித சக்தி இருக்குமானால் பவித்ரமான யாகப்புகை அதே மேக மண்டலத்தில் வியாபித்து கால விருஷ்டியை உண்டு பண்ணுமென்பதில் சந்தேகமில்லை.

**आश्रावय, अस्तुश्रौषट्, यज, येयजामहे, वौषट्**

என்ற மந்திரங்கள் மழையை உண்டுபண்ணக்கூடிய சக்தி வாய்ந்தவையென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன.

எதுவரை சூரியன் பூர்ண தேஜஸ்ஸுடன் ஜ்வலிக்கிறானோ அதுவரை மழை பெய்யும் என்று வேதம் கூறுகிறது :—

**याभिरादित्यस्तपति रश्मिभिः ताभिः पर्जन्यो वर्षति ।**

அக்னி ஹோத்ரிகளின் எண்ணிக்கை குறையக் குறைய சூரியன் படிப்படியாய் தேஜஸ்ஸை இழந்து அடியோடு மறைந்து விடுவான் என்று பகவான் மகாபாரதத்தில் கூறுகிறார் :—

**यावत्कालं हि तिष्ठन्ति लोके चाप्यग्निहोत्रिणः ।**
**तावदेव हि पुण्येन दीप्यते रविरम्बरे ॥**

நமது ஸர்க்கார் கோடிக்கணக்கான ரூபாயைச் செலவழித்து நீர்த்தேக்க அணைகளை கட்டி வருகிறதேதவிர, அணைகளுக்கு தண்ணீர் வந்துசேருவது எப்படி என்று சிந்திப்பதாகத் தெரியவில்லை. முன்காலங்களில் யக்ஞங்களை ஆதரிப்பதன்மூலமே அரசர்கள் பாசனத் தண்ணீர் வசதியைப் பெருக்கிக்கொண்டு வந்தனர். 1946-ஆம் வருஷத்தில் தண்ணீர் வரட்சி உச்ச நிலையை அடைந்திருந்தது. அவ்வருஷம் தஞ்சை ஜில்லாவில் ஏழு ஸோம யாகங்கள் நடந்ததையடுத்து மேட்டூர் அணை நிரம்பி, 1948-ம் வருஷம் வரை தண்ணீர் கஷ்டமே இல்லாமலிருந்தது.

உலகத்திலுள்ள ஸகல பொருள்களும் யக்ஞத்திற்காகவே சிருஷ்டிக்கப்பட்டவை யென்று மகாபாரதத்தில் பகவான் கூறுகிறார். யக்ஞத்துக்குத் தேவையான விருக்ஷங்களையும்

செடிகொடிகளையும் உற்பத்தி செய்வதால்தான், ஹிமயமலைக்கு பர்வதராஜா என்ற பட்டத்தையும், ஹிமவானுக்கு யாகங்களில் ஹவிர்ப் பாகத்தையும் பகவான் கொடுத்தார் என்று குமார ஸம்பவத்தில் காளிதாஸன் கூறுகிறார். ஹிமயமலையே யக்ஞத்துக்காகத்தான் சிருஷ்டிக்கப்பட்டதென்று விஷ்ணு புராணம் கூறுகிறது. யக்ஞத்தின் மூலம் மழை மட்டுந்தான் ஏற்படுமென்பதில்லை. உலகம் அழியாமலிருப்பதற்கு யக்ஞமே காரணம்

**तेनैव ध्रियते जगत्**

என்று பகவானே கூறுகிறார். மனிதர்களுடைய பாபங்களைப் போக்கி பரிசுத்தம் செய்யக்கூடிய சக்தி யக்ஞங்களுக்கு உண்டு

**यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषणाम् ।**

என்று கீதையில் பகவான் கூறுகிறார். அதைத் தரிசிப்பவர்களுக்கு ஸகல புருஷார்த்தங்களும் ஸித்திக்கும்

**पुरुषार्थं सोमयागसमीपगमनं विधत्ते**

என்கிறார் ஸாயனர். யாகம் நடக்கும் பிரதேசத்தில் வசிப்பவர்களுக்கு கீர்த்தி உண்டாகும் என்பதை

**सोमो वै यशः**

என்று வேதமே கூறுகிறது. யாகத்தில் தேவ லோக வைத்தியர்களாகிய அச்வினீ தேவதைகளைக் குறித்து செய்யப்படும் பிரவர்க்யம் என்ற கர்மாவில் மந்திர சிரவணம் செய்தால் தீராத நோய்கள் தீரும். பிரவர்க்யம் என்பது யக்ஞத்துக்கு சிரஸ் ஸ்தானம்

**शिरो वा एतत् यज्ञस्य, यत्प्रवर्ग्यः**

என்று வேதம் கூறுகிறது. தசரதனின் அச்வமேதத்தை வர்ணிக்கும் வால்மீகி பிரவர்க்யத்தையும் மூன்று ஸவனங்களையும் விடாமல் குறிப்பிடுகிறார். யாகத்தில் ஸுத்யாஹஸ் தினத்தில் நடைபெறும் பஹிஷ்பவமான ஸ்தோத்திரத்தை சிரவணம் செய்து, தீர்த்தத்தை புரோக்ஷித்துக்கொண்டால் ஸகல பாபங்களும் நீங்கும். விஷயந் தெரிந்தவன் அதைப் பயன்படுத்திக் கொள்ளாமலிருக்கமாட்டான் என்று வேதம் கூறுகிறது:—

**तस्मादेवं विदुषा बहिष्पवमान उपसद्यः ।**

மேலும் வபா ஹோமப் புகையை முகர்வதால் பாபம் போகு

மென்றும் புத்ர பாக்யம் உண்டாகு மென்றும் கூறப்படுகிறது. தசரதன் அவ்வாறு முகர்ந்து, தன் பாபத்தைப் போக்கிக் கொண்டானென்று ஸ்ரீமத் ராமாயணம் கூறுகிறது:-

**निर्णुदन् पापमात्मनः**

யக்ஞம் நடந்த பிரதேசத்தில் ஜனங்களிடையே ஒற்றுமை வளரும். விரோதிகள்கூட சினேகிதர்களாகிவிடுவர்.

**यज्ञेन द्विषन्तो मित्रा भवन्ति**

என்று உபநிஷத் கூறுகிறது. ராஜ்ய நிர்வாகம் ஹிதமாக இருக்கும். பயிர்களும் ஆடு மாடுகளும் விருத்தியடையும். பொருளாதார ரீதியிலும் பல்வேறு இனத்தவர்களுக்கு நன்மை உண்டு. மண் பாண்டம் செய்துதரும் குயவன், மர ஸாமான்கள் செய்துதரும் தச்சன், யாக குண்டம் அமைக்கும் கொத்தன், பந்தல் போடுபவன், மளிகைக் கடைக்காரன், ஜவுளிக் கடைக்காரன், பாத்திர வியாபாரி, கரிகாய் வியாபாரி இவ்வாறு பல்வேறு இனத்தவர்களுக்கும் பிழைப்பு கிடைக்கிறது. யாகங்களில் தக்ஷிணையும் அன்னதானமும் பிரதான அம்சங்களாகையால் அதற்கு உதவி புரிபவர்கள் உயர்ந்த புண்யத்தை அடைவர். ஏராளமான வேத வித்துக்களை தரிசித்து, அவர்களை உபசரிப்பதாலும், வித்வான்களின் உபன்யாஸங்களைக் கேட்பதாலும் மகத்தான புண்யம் ஏற்படும். மூன்று வேதங்களும் யாகங்களில் உபயோகமாவதால் வேதத்தை சிரவணம் செய்ய யாகம் அரிய வாய்ப்பளிக்கிறது. அது ஊருக்கே ஒரு பரிசுத்தி. நிம்மதியையும் நிதான புத்தியையும் விளைவிக்கும் சக்தி வேத கோஷத்துக்கு மட்டுமே உண்டு.

யாகசாலையில் யாக பத்னி அடக்கமாக ஒத்துழைப்பதைப் பார்க்கப் பார்க்க நமது ஸ்திரீகளுக்கு நாகரீகமோகம் தொலைந்து தெய்வபக்தியும், பதிபக்தியும் உண்டாகும். தாம்பத்ய வாழ்க்கையில் பத்நியின் அனுகூலத்தை விரும்புவோர் அக்நிஹோத்ரிகளை ஆதரித்தாலே போதும். யாகமுடிவில் நடக்கும் அவபிருத ஸ்நானமானது வேதம் விதிக்கும் ஸ்நானமாகையால் கங்கா ஸ்நானத்தைக் காட்டிலும் வீர்யமுள்ளது. ஸகல ஜாதியினரும் அவபிருத ஸ்நானம் செய்யலாம். யாகங்களில் ஹோமம் செய்யப்படும் ஸோமலதை அபூர்வமான ஆரோக்ய

சக்தி வாய்ந்ததென்றும், அதன் புகையானது யாகம் நடக்கும் ஊரையே பரிசுத்தி செய்யுமென்றும் ஆயுர்வேத கிரந்தங்கள் கூறுகின்றன.

**पुनानं पवनोद्धूतैः धूमैराहुतिगन्धिभिः**

என்று காளிதாஸனும் கூறுகிருன்.

யாகம் ஸகல ஸௌபாக்யங்களையும் கொடுக்கவல்லது. கோரிய பலன் கிடைக்கும்.

**अत्र स्वर्गश्च मोक्षश्च यो यथा गन्तुमिच्छति**

என்று சாஸ்திரம் கூறுகிறது. யாகம் செய்பவனுக்கு மோக்ஷமும் கிடைக்கும். ஆதலால்தான் யக்ஞத்தைவிட சிறந்த கர்மா கிடையாது என்றும், உலகமே அதில் அடங்கியிருக்கிறது; என்றும் வேதம் கூறுகிறது:—

**यज्ञो हि श्रेष्ठतमं कर्म, यज्ञे सर्वं प्रतिष्ठितम् ।**

யக்ஞ கர்மாவின் அவசியத்தை விளக்கிக்கூறுவதே வேதத்தின் லக்ஷ்யம். வேத மந்திரங்கள் அனைத்தும் யக்ஞங்களுக்காக ஏற்பட்டவை. ஸ்ரீருத்திர மந்திரம், கருடசயனம் எனப்படும் மஹாக்னி சயனத்தில் ஹோமம் செய்வதற்காகவும், சமகம் பூராவும் அந்த சயனத்தில் வஸோர்தாரையின்போது பிரயோகிப்பதற்காகவும் ஏற்பட்டவை. சமகப்பிரச்நத்தில் பிரார்த்திக்கப்படும் ஸாமான்கள் பெரும்பாலும் யாகத்துக்கு வேண்டியவை. சூரிய நமஸ்கார மந்திரத்துக்கு (அருணம் முதல் பிரச்னம்) ஆருண கேதுக சயனத்தில் பிரயோகம். வேத மந்திரங்கள் சிரௌத கர்மாக்களுக்காக ஏற்பட்டவை. யக்ஞங்களை உதாஸீனம் செய்பவன் வேதத்தை அவமதித்தவனுவான். வேத பாடசாலைகளையும் ஸ்வஸ்தி வாசனங்களையும், வேத பாராயணங்களையும் ஆதரிப்பது அந்த மந்திரங்கள் யாகத்துக்கு வேண்டுமென்பதற்காகவே யாகும். வாய்ப்பாடு மனப்பாடம் செய்வது அவை கணிதத்துக்கு வேண்டும் என்பதற்காகவல்லவா! வேதங்கள் அனைத்தும் அக்னி உபாஸனையையே நோக்கமாகக் கொண்டவை. **अग्निमीळे** என்று ரிக்வேதமும், **प्रार्पयतु श्रेष्टतमाय कर्मणे** என்று யஜுர்வேதமும், **अग्न आयाहि** என்று ஸாமவேதமும், ஆரம்பமாகின்றன. பிராம்மணனுக்கு அக்நியே தேவதை:-

**अग्नौ तिष्ठति विप्राणां**

பிராம்மணனும் அக்னியும் பகவானுடைய முகத்திலிருந்து ஆவிர்ப்பவித்ததாக புருஷஸூக்தம் கூறுகிறது. எப்பாடு பட்டாவது பிராம்மணன் யக்ஞங்கள் செய்தே ஆகவேண்டு மென்று பீஷ்மர் கூறுகிறார்:

**सर्वथा सर्वदा विप्रैः यष्टव्यमिति निर्णयः ।**

வேதத்துக்கு அடுத்தாற்போல் யக்ஞமகிமையை விஸ்தாரமாகச் சொல்வது மகாபாரதம். ஆதலால்தான் அதற்கு ஐந்தாவது வேதம் எனப்பெயர். லோகக்ஷேமம் பிராம்மணனுடைய கர்மா னுஷ்டத்தைப் பொறுத்ததாயிருக்கிறது:

**ब्राह्मणे सर्वभूतानां योगक्षेमस्समाहितः ।**

என்று மகாபாரதம் கூறுகிறது. உலகத்துக்காகப் பாடுபடவே பிராம்மணன் ஏற்பட்டான்

**इह क्लेशाय महते**

என்று மனு கூறுகிறார். ஆதலால்தான்

**ब्राह्मणो मम देवता**

என்று கீதையில் பகவான் கூறுகிறார்.

நாம் தரிக்கும் பூணூலுக்கு யக்ஞோபவீதம் எனப்பெயர். நாம் யக்ஞம் செய்யக்கடமைப்பட்டவர்கள் என்பதை அது காட்டுகிறது. யாகம் செய்பவனுக்கு பத்நி அவசியமாதலால் விவாகத்தின் அவசியத்தை தைத்திரீயோபநிஷத்து வற்புறுத்து கிறது. அவசியமேற்பட்டால் மறு விவாகம் செய்துகொண்டு கர்மானுஷ்டானம் செய்யவேண்டும்

**पुनर्दारक्रियां कुर्यात् पुनराधानमेव च ।**

என்று மனு அழுத்தந்திருத்தமாய்க் கூறுகிறார்.

விவாஹ காலத்தில் வரப்பிரேஷணம், ஸப்தபதி முதலிய மந்திரங்கள் மூலம் நாம் யக்ஞம் செய்யப்போவதாக அக்னிஸன் னிதியில் பிரதிக்ஞை செய்கிறோம். இந்த நிலையில் ஒரு பிராயச் சித்தமாகக் கருதி பிறர் செய்யும் யக்ஞத்தையவாது ஆதரிப்பது அவசியம்.

தேவதைகள் உண்டு என்பதை நம்பித்தான் நாம் சிராத் தம், தர்ப்பணம், ஆயுஷ் ஹோமம் முதலியவை செய்து கொள் கிறோம். அந்த கர்மாக்களில் கூறப்படும் மந்திரங்களையும் நம்புகிறோம். நவக்கிரக சாந்தி செய்துகொள்கிறோம். மந்திர

வாதிகளைக் கொண்டு துர்தேவதைகளுக்கு மது மாம்ஸாதிகளை நிவேதனம் செய்து ஆபிசாரப் பீடைகளை விலக்கிக்கொள்கிறோம். பீடைகளுக்கேற்ற கர்மாவைச் செய்கிறோமே தவிர வெறும் பக்தியைக்கொண்டு திருப்தியடைவதில்லை. ஆனால் தாய் போன்ற வேதமானது இந்திராதி தேவதைகளை த்ருப்திசெய்யக் கூடிய லோகக்ஷேமகரமான கர்மாக்களைக் கட்டளைபோல் விதித்திருந்தும் அதை நாம் அலக்ஷ்யம் செய்கிறோம். பொது நலனில் நாம் அக்கரை காட்டாமலிருந்தால் நாம் செய்யும் இதர காம்யமான கர்மாக்களுக்கு பலன் ஏற்படாமல் போய்விடும். வேதமிடும் கட்டளையை உதாஸீனம் செய்துவிட்டு கடவுளின் கருணையை நாம் எதிர்பார்க்க முடியாது.

அக்னி ஹோத்ரிகள் கௌரவிக்கப்படும் இடங்களில் சுபிட்சம் நிலவுமென்றும் திருட்டு பயம் இராதென்றும் வால்மீகி கூறுகிறார் :—

नानाहिताग्निर्नायज्वा न क्षुद्रो वा न तस्करः ।

ராம ராஜ்யம் நிலவிய காலத்தில் யாகங்கள் குறைவின்றி நடந்தன. ராமாயண பாராயணம் செய்தால் வாஜபேய யாகம் செய்த பலனுண்டு என்று ராமாயணம் கூறுகிறது. அதே மாதிரியே ஸ்ரீ மகாபாரதத்திலும் பலச்ருதிகளைக் காணலாம். ஸத்யம், கோபமின்மை முதலிய குணங்கள் உள்ளவர்கள் யாகம் செய்தவர்களுக்கொப்பானவர்கள் என்று வியாசர் கூறுகிறார். இத்தகைய பலச்ருதிகளும் உபமானங்களும் யக்ஞங்களின் சிறப்பையே காட்டுகின்றன. அக்னி ஹோத்ரிகள் நிறைந்திருந்ததால்தான்

तामग्निमद्भिः गुणवद्भिरावृताम्

அயோத்திக்குச் சிறப்பு ஏற்பட்டதென்று வால்மீகி கூறுகிறார்.

ஸ்ரீமத் ராமாயணமே தசரதர் செய்த அச்வமேத யாகத்துடன் ஆரம்பமாகிறது. இறுதியில் ஸ்ரீராமர் செய்த யாகத்துடன் முடிவடைகிறது. யக்ஞ ஸம்ரக்ஷணத்துக்காகவே ஸ்ரீராமர் அவதரித்தார். விசுவாமித்திரரின் யாகத்தை ரக்ஷித்தது மட்டுமின்றி, காட்டில் பதினான்கு வருஷகாலம் ரிஷிகளின் அக்னிஹோத்ர சாலைகளிலேயே பொழுது போக்கினார். ரிஷிகளின் யாகங்களுக்கு இடையூறு செய்யும் ராக்ஷஸர்களை ஸம்ஹரிப்பதாகவும் வாக்களித்தார். ஸ்ரீ கிருஷ்ண பகவானும் யுதிஷ்டிரரின் ராஜஸூய யாகத்தை நடத்தித்தந்தார். யக்ஞங்களை துவேஷிப்பவன் என்பது ஒன்றே சிசுபாலனைக்

கொல்வதற்கு போதுமான காரணமாகுமென்று பகவான் கூறினர். ஏராளமான யக்ஞங்களைச் செய்

**यजस्व यज्ञैः विविधैः बह्वन्नैः आप्तदक्षिणैः**

என்று பீஷ்மர் யுதிஷ்டிரருக்கு உபதேசிக்கிறார்.

ஸ்ரீமத் ராமாயணம், மகாபாரதம் முதலியவைகளுக்கு இன்னமும் மதிப்பு இருந்துவருகிறதென்றால் அவை யாக மேடைகளில் அக்னி ஸன்னதியில் அரங்கேற்றப்பட்டதுதான் காரணம். உபநிஷத்துக்களில் முக்கிய ஸ்தானம் வகிக்கும் பிரகதாரண்யக உபநிஷத்தும் ஜனகருடைய யக்ஞ வாடத்தில் தான் உருவாகியது. நம் நாட்டில் அறிவு வளர்ச்சிக்கு யாக மேடைகளே உதவியாயிருந்திருக்கின்றன. மேலும் அக்னி உபாஸனை குறையக்குறைய நாட்டின் பொருளாதார நிலை மோசமடையும். ஐச்வரியம் பெருகவேண்டுமானால் அக்னியை உபாஸிக்கவேண்டுமென்று சாஸ்திரம் கூறுகிறது.

**श्रियमिच्छेत् हुताशनं**

ஆதலால்தான் ஸ்ரீ ஸூக்த-ஹோமம் விசேஷமாகச் சொல்லப் படுகிறது. அறிவுக்கும் வாக்கு வன்மைக்கும் அக்னி உபாஸனை அவசியம். வாக்குக்கு தேவதை அக்னி.

பகவான் யக்ஞ ஸ்வரூபி **यज्ञो वै विष्णुः** என்று வேதம் கூறுகிறது. ஆதலால்தான் இந்த அம்சத்தை குறிக்கும் பல நாமாக்களை விஷ்ணு ஸகஸ்ரநாமம் கூறுகிறது. விஷ்ணு ஸகஸ்ரநாமத்தில் **वषट्कारः** என்ற நாமா மூன்றாவது நாமாவாக முதல் சுலோகத்திலேயே அமைந்திருப்பது குறிப் பிடத்தக்கது. அம்பிகையும் யக்ஞரூபி என்று லலிதாஸகஸ்ர நாமம் கூறுகிறது. விஷ்ணுஸகஸ்ரநாமம் பகவான் ஸ்ரீ கிருஷ் ணனின் ஸன்னதியிலேயே பீஷ்மரால் சொல்லப்பட்டு அங்கி கரிக்கப்பட்டது. கீதையிலும் பகவான் யக்ஞங்களை சிலா கித்துப் பேசுகிறார்.

**यज्ञानां जपयज्ञोऽस्मि**

என்ற கீதாவாக்யத்தை துண்டாக எடுத்து அர்த்தம் பண்ணு வது மகாபாரதத்திலும் (கீதையிலும்) பகவான் கூறியிருக்கும் இதர வசனங்களுக்கு முரணாகிவிடும். யக்ஞங்களிலும் ஜபப்

பகுதியின் விசேஷத்தைத்தான் அது காட்டும். மரங்களுக்குள் நான் அச்வத்தம் என்று பகவான் கூறுவதை வைத்துக் கொண்டு நாம் நம் வீட்டு நிலைக்கதவுகளை அச்வத்தமரத்தில் செய்து போடுவதில்லை. ஸாமவேதத்தை பகவான் மெச்சுகிறார் என்றால் யாகங்களில் சொல்லப்படும் பவமான ஸ்தோத்ரங்களின் பெருமையைத்தான் அது குறிக்கும்.

**अहं क्रतुरहं यज्ञः**

என்று அதே கீதையில் பகவான் சொல்வது குறிப்பிடத் தக்கது. கலியில் பிராம்மணர்கள் யக்ஞங்கள் நடக்குமிடத்தில் வஸிக்கவேண்டும்

**यत्र यज्ञाश्च दानाश्च तपस्सत्यं धृतिः क्षमा ।**
**हिंसाश्च धर्मसंयुक्ताः प्रचरेयुः द्विजोत्तमाः ॥**

என்று மகாபாரதத்தில் பகவானே கூறுகிறார்.

யாகம் செய்யும் யஜமானனை ஈச்வரனாகவே பாவிக்க வேண்டுமென்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஈச்வரனின் அஷ்டமூர்த்திகளில் யாகம் செய்யும் யஜமானன் **या च होत्री** ஒருவன் என்றும், விதிப்படி ஹோமம் செய்யப்படும் ஹவிஸ்ஸை எடுத்துச் செல்லும் அக்னி

**वहति विधिहुतं या हविः**

ஒருவன் என்றும் இரண்டையும் காளிதாஸன் குறிப்பிடுகிறான். சகுந்தலையை துஷ்யந்தனுடைய வீட்டுக்கு அனுப்பும்போது அவளை அக்னிஹோத்ரசாலைக்கு பிரதக்ஷிண நமஸ்காரம் செய்து விட்டுப் போகுமாறு கண்வ ரிஷி ஏவுகிறார். அக்னிஹோத்ராக்னியில் ஈச்வரஸான்னித்யம் இருப்பதே இதற்குக் காரணம்.

லோகக்ஷேமத்தை லட்சியமாகக்கொண்ட வேதமானது தர்மத்துக்கு விரோதமாக ஒரு வார்த்தைகூடக் கூறாது.

**वेदोऽखिलो धर्ममूलम्**

கருணையில் வேதத்துக்கு ஈடேகிடையாது. நாம் நடக்கும் போதும், அம்மி அரைக்கும்போதும், சமைக்கும் போதும் நாமறியாமலேயே கோடிக்கணக்கான ஜீவராசிகள் மடிந்து விடுகின்றன. தவிர்க்க முடியாத இதைக்கூட பாபமாகக்கருதி வேதமானது பிராயச்சித்த ரீதியில் வைச்வதேவம் முதலிய கர்மாக்களை விதித்துள்ளது. ஸந்தியாவந்தனத்தில் நாம்

கொடுக்கும் அர்க்யப்பிரதானம் அஸ்திரங்களாக மாறி சூரியனின் விரோதிகளாகிய மந்தேஹ ராக்ஷஸர்களை வதம் செய்கிறது. இதைக்கூட ஒரு பாபமாகக்கருதி இதற்குப் பிராயச்சித்தமாக வேதம் ஒரு பிரதக்ஷிணத்தை விதித்துள்ளது. ஆனால் அதே வேதமானது யாகத்தில் நடக்கும் (பசு) அஜ விசஸனத்துக்கு ஒரு பிராயச்சித்தம் கூட விதிக்கவில்லை. அதைப் பாபமாகவும் கருதவில்லை. யாகத்துக்கு ஹிம்சையற்ற கர்மா அத்வர என்று வேதம் பெயரிட்டுள்ளது. பசுவுக்கு பிரயாசையன்னியில் உத்தம கதி கிடைப்பதால் அது ஒரு உபகாரமாகி விடுகிறது. சுயநலனோ, துவேஷமோ அன்னியில் வேதத்தை நம்பி இதைச்செய்வதால் யாகம் செய்பவனுக்கு பாபம் ஸம்பவிப்பதில்லை. இதைச் செய்யத்தயங்கினால் யஜமானனுக்கு மகத்தான கேடு உண்டாகுமென்று வேதம் கூறுகிறது. சுயநலனுக்காகச் செய்யப்படும் சாந்திகளில் பிரயோகமாகும் மந்திரங்களை நம்பும் நாம், யாக பசு விஷயத்தில் மட்டும் மந்திரங்களை நம்பாமலிருப்பது அர்த்தமற்ற நிலையாகும்.

**वेदात् धर्मो हि निर्बभौ**

வேதம் விதிக்கும் காரியம் ஒருக்காலும் அதர்மமாகாது என்கிறார் மனு. அப்படியே பிரம்மஸூத்ரமும் கூறுகிறது :—

**अशुद्धमिति चेन्न शब्दात्**

யாகபசு உள்பட அனைவருக்கும் நன்மை பயக்கும் கர்மாவில் ஹிம்சையென்ற பேச்சுக்கே இடமில்லை

**यज्ञोऽस्य भूत्यै सर्वस्य तस्माद्यज्ञे वधो अवधः**

என்கிறார் மனு. கீதை, உபநிஷத் முதலியவை இதை ஹிம்ஸையென்றே கருதவில்லை. ஆதிசங்கரரும் அப்படியே. தன் தொழிலைச் செய்பவனுக்கும் ஸ்வகர்மாவை அனுஷ்டிப்பவனுக்கும் பாபம் கிடையாதென்பதைச் சொல்லுமிடத்தில் காளிதாஸன் யக்ஞத்தைத்தான் உதாரணமாகக் கூறுகிறான் :—

**पशुमारणकर्म**

பகவதர்ப்பணமான கர்மாவில் பயன்படும் யாகபசுவுக்குப் பரிந்துபேசுபவர்கள் இதர இடங்களில் சுயநலனுக்காக நடைபெறும் கொலைகளைப்பற்றிப் பரிதாபப்படக்காணோம். குளங்கள் பாசிக்குத்தகைக்கு விடப்படுகின்றன. கசாப்புக் கடைகளை யாரும் மறியல் செய்யக் காணோம். பட்டுப் பூச்சியைக்

கொதிக்கும் வெந்நீரில் போட்டுக் கொன்று பட்டுநூல் எடுக்கப் படுவதைக் கும்பகோணத்தில் மகாமகத்தின்போது சர்வோதயக் கண் காட்சியில் அனைவரும் பார்த்திருக்கக் கூடும். யாகபசு விஷயமானது ஆதிகாலத்தில் மாம்ஸபோஜனம் ஸகஜமாயிருந் ததைக் காட்டுவதாக நினைப்போர் மாம்ஸ போஜனத்தை நமது சாஸ்திரங்கள் கடுமையாகக் கண்டிக்கின்றன என்பதை அறியாதவர்களாவர். யக்ஞங்களில் யாரும் மாம்ஸம் புஜிப்ப தில்லை. ருத்விக்குகள் மட்டும் சாஸ்திரத்துக்காகப் பிராசனம் செய்வர். விதண்டா வாதங்களுச்குச் செவி சாய்த்தால் வேதத் தில் படிப்படியாய் நம்பிக்கை குறைந்துவிடும். பெரிய கர்மாக் களை ஆதரிக்காவிடில் ஸந்தியாவந்தனம் கூட அவசியமில்லை என்ற நிலை ஏற்பட்டு நமக்கும் இதரமதஸ்தர்களுக்கும் அதிக வித்தியாஸமில்லாமல் போய், மாம்ஸபோஜனமே நித்யப்படி ஆகாரமாகிவிடவும் கூடும். ஆகையால்தான் கீதையில் பகவான்

**तस्मात् शास्त्रं ते प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ**

என்றார். யாகங்களைச் செய்தே தீரவேண்டும்,

**न त्याज्यं कर्ममेव तत्**

என்று கீதையில் பகவான் அழுத்தம் திருத்தமாய்க் கூறுகிறார். **निश्चयं मतमुत्तमम्** என்கிறார்.

கர்மஸ்வரூபத்தை அறிந்து யக்ஞத்தைச் செய்பவன் மோக்ஷமடைகிறான் என்பதை யாக்ஞவல்க்யர் பிரகதாரண்யக உபநிஷத்தில் அச்வலப் பிரச்னத்தில் கூறுகிறார்.

**देवपितृकार्याभ्यां न प्रमदितव्यम्**

என்று தைத்திரீய உபநிஷத் கூறுகிறது. கர்மானுஷ்டானம் அவசியம்

**तान्याचरथ नियतम्**

என்று முண்டக உபநிஷத்தும் கூறுகிறது. இதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை. உபநிஷத்துக்கள் அப்படிக் கூறாவிடில் வேதமே முன்னுக்குப் பின் முரணாகிவிடும். கர்மாவை ஜடம்போல் செய்துகொண்டிராமல் ஞானத்தையும் விருத்தி செய்து கொண்டே வரவேண்டுமென்பதுதான் உபநிஷத்துக்களின் கொள்கை. ஆரம்பகாலத்தில் கர்மாவில் ருசி ஏற்படுவதற்காக ஸ்வர்க்கம் முதலிய ஆசைகளை வேதம் காட்டி மனிதனை வசப்

படுத்துகிறதேயொழிய கர்மானுஷ்டானத்தின் பலன் மோக்ஷமல்லவென்று கூறமுடியாது. யக்ஞசீலர்களுக்கு உரிய கதி ஜடாயுவுக்குக் கிடைக்கவேண்டும் என்று ஸ்ரீராமர் பிரார்த்தித்தார். ஜடாயுவுக்கு மோக்ஷம் கிடைத்தது. இரண்டையும் சேர்த்துப் பார்த்தால் கர்மானுஷ்டானம் மோக்ஷத்துக்கு ஹேது என்றேவிளங்கும். ஸ்ரீராமர் இறுதியில் பிரம்மலோகம் செல்வார் என்று பாலகாண்டத்தில் நாரதர் கூறுகிறார். இதைக்கொண்டு ஸ்ரீராமருக்குப் பிரம்மலோகம்தான் உண்டு என்று கூறிவிட முடியாது. பிரம்மலோகத்தின் வாயிலாக மோக்ஷம் என்றுதான் அர்த்தம். பிரம்மலோகத்தில் அக்னிஹோத்ரிகளுக்கு மகத்தான வரவேற்பு உண்டு என்று முண்டக உபநிஷத் கூறுவதற்கும் அதே அர்த்தம்தான். இல்லையேல்,

**अग्निहोत्रादि तु तत्कार्यायैव**

என்று ப்ரம்மஸூத்ரம் கூறியிருக்காது. நிஷ்காம்யமாகவும், பகவதர்ப்பணமாகவும் செய்யும் கர்மா ஆத்ம ஞானத்தைக் கொடுத்தே தீரும். ஆகவே கர்மானுஷ்டானம் செய்பவர்கள் மோக்ஷத்துக்காகப் பாடுபடுபவர்கள். அப்படிப்பட்டவர்கள்மீது பட்ட காற்றே நம்மைப் பரிசுத்தப்படுத்தும் என்று சாஸ்திரங்கள் கூறுவதால் அவர்களை ஆதரிப்பதால் நமக்கு நன்மையுண்டு.

ஸ்மார்த்த கர்மாக்களைக் காட்டிலும், வேதோக்தமான அக்னிஹோத்ரம் முதலிய கர்மாக்களுக்கு முக்யத்வம் அதிகம். ஸந்தியாவந்தனம்போல் அக்னிஹோத்ரமும் தீட்டில்கூட விடாமல் செய்யவேண்டிய கர்மா. ஒரு சமயம் பாண்டவர்கள் ஜலம் அகப்படாததால் மண்ணைக்கொண்டு அர்க்யபிரதானம் செய்தனர். பிராம்மணன் விவாஹமானவுடன் ஆதானம் என்னும் கர்மாவைச் செய்து, அக்னிஹோத்ரத்தை மேற்கொள்ளவேண்டும். கார்ஹபத்யம், தக்ஷிணாக்னி, ஆஹவனீயம் எனப்படும் மூன்று அக்னிகளையும் தினந்தோறும் உபாஸிக்கவேண்டும். அமாவாஸையில் தர்ச இஷ்டியையும், பௌர்ணமியில் பூர்ணமாஸ இஷ்டியையும் செய்யவேண்டும். வருஷத்தில் ஒரு தடவை சாதுர்மாஸ்யம், ஆக்ரயணம், பசுபந்தம் முதலியவற்றைச் செய்யவேண்டும். அக்னிஷ்டோமம் எனப்படும் ஸோமயாகம் செய்தபிறகுதான் பிராம்மணன் பரிசுத்தமடைகிறான். அக்னிஹோத்ரத்தை மேற்கொள்ளும் சமயத்திலேயே இந்த ஸோம

யாகத்தைச் செய்துவிடுவது வழக்கம். சிலர் பிந்தியும் செய்வதுண்டு. அக்னிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசி, அதிராத்ரம், அப்தோர்யாமம், வாஜபேயம் என்று ஏழுவித ஸோமயாகங்களுண்டு. வாஜபேயம் நீங்கலாக மற்ற ஆறு யாகங்களுக்கும் ஜோதிஷ்டோமம் என்ற பொதுப்பெயர் உண்டு. இந்த ஏழு யாகங்களும் நித்யமான யாகங்கள். ஆதலால் அவற்றைச் செய்ய விரும்புவோருக்கு உபகாரம் செய்வது மகத்தான புண்யமாகும்.

தற்கால நிலைமையில் நாம் நேரில் யாகங்களைச் செய்யமுடியாமலிருக்கிறோம். அதற்குப் பிராயச்சித்தமாகப் பிறருக்காவது உபகாரம் செய்தால் பாபம் ஓரளவு குறையும். நம் வீட்டில் வாத்தியாரைக் கொண்டு ஸூரியநமஸ்காரம் செய்துவருவது போல், யாகம் செய்பவர்களை நமது பிரதிநிதிகளாகக் கருதி புண்யத்தை ஸம்பாதித்துக்கொள்வது விவேகமாகும். இதைக் கூட நாம் செய்யத் தயங்கினால் கடவுள் நம்முடைய பக்தியைப் பக்தியாகக் கருதமாட்டார். யாகாதி கர்மாக்களை ஆதரிக்காவிடில் நமது ஸ்த்ரீகளுக்கும் குழந்தைகளுக்கும் நல்ல வாஸனை ஏற்படாமல் பிற்காலத்தில் அவர்கள் பெருஞ்சுமையாகிவிடுவார்கள்.

நமது வீட்டுப் புரோகிதர்கள் தங்கள் குழந்தைகளை இங்கிலீஷ் படிப்புக்கு அனுப்புவது ஸஹஜமாகிவிட்டது. அக்னிஹோத்ரிகளின் வீடுகளில் தாய்தந்தை இருவருமே கர்மானுஷ்டானத்தில் சிரத்தையுடன் ஈடுபடுவதால் அவர்கள் தங்கள் பிள்ளைகளைப் புராதன ஆசாரத்தை மேற்கொள்ளுமாறு செய்வது சுலபம். யாகாதிகர்மாக்களுக்கு ஆதரவு இருக்குமானால், அவர்கள் தங்கள் பிள்ளைகளை வேதாத்யயனம் செய்யுமாறு தூண்ட ஹேதுவுண்டு. இதன்மூலம் வேதம் ரக்ஷிக்கப்பட்டதாகும். வேதபாடசாலைகள் ஒவ்வொன்றாக மூடப்பட்டுவரும் இக்காலத்தில் அக்னிஹோத்ரிகளின் வீடுகள் ஒவ்வொன்றும் ஒரு சிறிய பாடசாலையாக விளங்கினாலன்றி வேதத்தை ரக்ஷிக்க வேறு வழியில்லை. வேத மந்திரங்களை அவைக்குரிய கர்மாக்கள் நடைபெறும் வீடுகளில் வைத்து ரக்ஷிப்பதுதான் சரியான ரக்ஷணமாகும்.

சோள ராஜ்யம் நிலவிய காலத்தில் வீட்டுக்கு வீடு அக்னி ஹோத்ரிகள் இருந்தனர்

गृहे गृहे पश्य कृताग्निहोत्राः

என்று விச்வகுணுதர்சம் கூறுகிறது. ஆனால் இன்றோ தமிழ் நாடு பூராவிலுமாக 50 அக்னிஹோத்ரிகள் தாம் இருக்கின்றனர். இதில் 30 பேர் வரை தஞ்சை ஜில்லா வாஸிகள். அதில் சுமார் 12 பேர் சேங்காலிபுரத்தில் வஸிப்பவர்கள். மகாராஷ்டிரத்தி லும், ஆந்திராவிலும் சில அக்னிஹோத்ரிகள் இருப்பதாகத் தெரிகிறது. இந்த 50 பேர்களைக்கூட நாம் ஆதரிக்க முடிய வில்லை என்றால் அது பெரிய வெட்கக்கேடாகும். யாகங்களை ஆதரிப்பதன் அவசியத்தை வற்புறுத்தி ஸ்ரீ ஜகத்குரு காம கோடி ஆசாரியாள் 1932ல் சென்னையில் பல உபந்யாஸங்கள் செய்தார்கள்.

குறைந்தது ஒரு இஷ்டிக்கு ஐந்து ரூபாயும், ஒரு பசுபந் தத்துக்கு 150 ரூபாயும் செலவாகும். யாகங்களுக்கு ஆயிரக் கணக்கில் ரூபாய் செலவாகும், தக்ஷிணையையும், அன்னதானத் தையும் தாராளமாகச் செய்தால் ஒரு வாஜபேய யாகத்துக்கு ரூ 5000 வரை வேண்டியிருக்கும். பலபேருடைய பணம் யக்ஞத் தில் சேரவேண்டும் என்பதற்காக யர்ககர்மாவானது மிகப் பெரியதாய் அமைக்கப்பட்டிருக்கிறது. இரண்டொரு தனிகர்கள் சுலபமாய் அந்தப் புண்யத்தை அடித்துக்கொண்டு போய்விடக் கூடாது என்பதே நோக்கம். மேலும், பலபேர்களிடம் வசூல் செய்யும்படி இருந்தால்தான் யக்ஞவிஷயம் விளம்பரமாகி, பலருடைய காதுக்கு எட்டி, யக்ஞதரிசன பாக்யம் பலருக்குக் கிடைக்கும். யக்ஞதரிசனம் விசேஷமாகையால் அழைப்பின் றியே தரிசனத்துக்குப் போகவேண்டுமென்று சாஸ்திரம் கூறு கிறது.

अनाहूतोऽध्वरं गच्छेत्

மனிதன் தன் பொருளை யாகத்துக்கே செலவிடவேண்டுமென்று மகாபாரதத்தில் பிரம்மா கூறுகிறார். மனச்சாட்சிக்கு விரோ தமின்றி யதாசக்தி தாராளமாய் கொடுக்கவேண்டு மென்று ஆபஸ்தம்பர் கூறுகிறார். கொடுத்தேதீரவேண்டும் என்றும், இல்லையேல் பாபமென்றும் ஹரதத்தர் கூறுகிறார்:—

अवश्यं देयं, अदाने प्रत्यवायात् ।

பிராம்மணன் அக்னிஹோத்ராதி கர்மாக்களை விட்டுவிட்டால் வீரஹத்தி என்ற தோஷம் ஸம்பவிக்கும்

**वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते**

என்று வேதம் கூறுகிறது. யாகாதி கர்மாக்களை ஹிம்ஸையென்றெண்ணி அவைகளை அனுஷ்டிக்காமலிருப்பது மஹா பாபமென்றும், யாகபசுவதத்தை நிந்திப்பவர்கள் நரகவேதனையை யடைவரென்றும்

**शाश्वतं तस्य किल्बिषम्**

என்றும் மகாபாரதம் அனுசாஸனிக பர்வாவில் பகவான் கூறுகிறார். ஒருவன் பெரிய பாபியாக இருந்தாலும் அவன் யாகம் செய்ய முன் வந்தால் அவனை ரிஷிகள் ஸாதுவாகவே கருதுவார்கள் என்று மகாபாரதம் சாந்திபர்வாவில் வியாஸர் கூறுகிறார்.

யாகங்களைப் பண்ணிவைக்கும் முறை ஒரு தனிக் கலையாகும். வெறும் புத்தகத்தின் உதவியைக்கொண்டு யாகத்தை நடத்திவிட முடியாது. யாகசாலையில் பெரியோர்கள் அனுஷ்டிக்கும் வழியை நேரில் பார்த்துப் பார்த்து அனுபவபூர்வமாய் கற்றுக்கொள்ள வேண்டிய விஷயம் இது. வெகுகாலம் யாகங்களே நடைபெருமலிருந்து விட்டால் யாகத்தைப் பண்ணிவைக்கும் வழி பழக்கத்தில் இல்லாமல் போய்விடும். அடிக்கடி யாகங்கள் நடைபெற்று வந்தால்தான் யாக புரோகிதர்களின் குருசிஷ்ய பரம்பரை நீடித்துவளரும். பிற்காலத்தில் ஒருசமயம் நமக்கு யாகம் செய்வதில் ருசி ஏற்பட்டால் அப்பொழுது அதைப் பண்ணி வைப்பவர்களில்லாமல் போய்விடக்கூடாது. நெல்லிச்சேரி ஸ்ரீ ராமநாத சிரௌதிகள் போன்ற வித்வான்களின் எண்ணிக்கை பெருகவேண்டும். ஆபஸ்தம்ப சிரௌத ஸூத்ர வழியாவது நிலைத்திருக்கவேண்டும். இதையும் ஆஸ்திகர்கள் கவனத்தில் கொள்ளவேண்டும்.

யாகமும், அக்னிஹோத்ரமும் ஸகஜமாயிருந்த நாடு நம் நாடு. ஆனல் இப்பொழுது நமது ஜனங்களுக்கு யாகசாலை என்பது ஒரு புதிய கண்காட்சி போல் தோன்றுகிறது. முற்காலத்தில் ஸ்த்ரீகளுடைய சம்பாஷணையில் கூட யக்ஞவிஷயம் ஸரளமாய்க் கலந்திருந்தது. சகுந்தலை தன்னுடைய குழந்தைப் பரு

வத்தில் தன்னைக் கண்வர் எடுத்துச் சென்றதை விளக்கிக் கூறும் இடம் கவனிக்கத் தக்கது. "அக்னிஹோத்ரியானவன் அரணிக்கட்டையை ஆதரவுடன் எடுத்துச் செல்வதுபோல் என்னை எடுத்துச் சென்ருர் :—

**स माऽरणिमिवादाय स्वमाश्रममुपागमत्**

என்று கூறுகிருள். தன் பிள்ளை பரதன், துஷ்யந்தனுக்குப் பிறந்தவன் என்று கூறுமிடத்தில் "இந்தக் குழந்தை உம்முடைய(துஷ்யந்தனுடைய)குழந்தையே. எப்படி ஆஹவனீயாக்னியானது கார்ஹபத்ய அக்னியின் பகுதியோ, அதுபோல் இவனும் உன்னிடமிருந்து உண்டானவன்"

**यथा चाहवनीयाग्निः गार्हपत्यात् प्रणीयते**

என்கிருள்.

விவாஹ காலத்தில் ஒரு நுகத்தடியின் துவாரத்தின் வழியாகக் கன்னிகையின் தலைமீது தீர்த்தத்தை புரோக்ஷிக்கும் காரியமானது யக்ஞமஹிமையைக் குறிப்பதாகும். அபாலை என்ற கன்னிகைக்குக் குஷ்டரோகம் ஏற்பட்டு விவாஹமாகாமலேயே காலம் தள்ளவேண்டியிருந்தது. தனக்கு விவாஹம் ஆகியிருந்தால், தானும், தனது கணவன் செய்யக்கூடிய யக்ஞங்களில் பங்குகொண்டு, தேவதைகளுக்கு ஸோமபானம் செய்து வைத்த புண்யத்தை அடைந்திருக்கலாமே என்ற ஏக்கத்துடன் இருந்து வந்தாள். பின்னர் ஒரு சமயம் ஒரு நதியின் வெள்ளத்தில் அவள் சிக்கிக்கொண்டாள். அப்பொழுது ஒரு இடத்தில் நதிக் கரையோரத்தில் படர்ந்திருந்த கொடி ஒன்றைத் தனது வாயால் கவ்விக்கொண்டு, தன்னைக் காப்பாற்றிக்கொள்ள முயன்ருள். அந்தக் கொடியைக் கடித்ததும், அது ஸோமலதை என்பதை உணர்ந்தாள். தனது நாக்கில் பட்ட ஸோம ரஸம் இந்திரனுக்குத் திருப்தியளிக்கவேண்டும் என்று மனதால் பிரார்த்தித்தாள். அந்த க்ஷணமே இந்திரனும் திருப்தியடைந்து, ரதத்தில் ஆகாயமார்க்கமாய் வந்து நின்று தீர்த்தத்தை ப்ரோக்ஷித்தான். அந்தத் தீர்த்தம் ரதத்தின் நுகத்தடித் துவாரத்தின் வழியாக அபாலை மீது வந்து விழுந்தது. உடனே அவளுக்கு ரோகம் நீங்கிக் கரையேறவும் முடிந்தது. பின்னர் அவள் ஸர்வமங்களங்களுடனும் வாழ்ந்தாள்.

ஸ்ரீ ராமர் காட்டுக்குப் போகுமுன் யுவராஜ பட்டாபிஷேக ஏற்பாடு நடந்துகொண்டிருந்தபோது, தனது கணவன் நாளடைவில் அரசனாகி அரசர்களுக்குரிய யக்ஞங்களைச் செய்யும் கோலத்தைத் தான் பார்க்க விரும்புவதாக ஸீதாதேவி ஸ்ரீராமரிடம் கூறுகிறாள்:—

दीक्षित व्रतसंपन्नं वराजिनधरं शुचिम् ।
कुरङ्गशृङ्गपाणिं च पश्यन्ती त्वां भजाम्यहम् ॥

இப்படிப்பட்ட வாஸனை நமது ஸ்திரீகளிடத்திலும் குழந்தைகளிடத்திலும் எவ்வளவுக்கெவ்வளவு அதிகரிக்கிறதோ அவ்வளவுக்கவ்வளவு நமது வாழ்க்கை சிறப்புற்று விளங்கும் என்பதில் ஐயமில்லை.

---

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| iii | 13 | परममीतं | परममितं |
| 14 | 16 | ஸ்ரீஸுக்த | ஸ்ரீஸூக்த |
| 17 | 15 | तस्मात् शास्त्वं ते | तस्मात् शास्त्रं |
| ,, | 17 | कर्ममेव | कार्यमेव |
| ,, | 31 | வரமெண்டு | வரவேண்டு |
| 23 | 6 | दीक्षित | दीक्षितं |



சாரதா விலாஸ பிரஸ், கும்பகோணம்.

